பிரஜைகளின் விசேஷமதிப்பைப் பெறச்செய்வித்தன. அவர்மரணம் இச்சமஸ்தானத்துக்குப் பெருந்துன்பத்தை வருத்தியது. உங்களுக்கு நேர்ந்த துக்கத்தை யுணர்ந்து நான்கொள்ளும் அனுதாபங்களை யங்கீகரிக்க வேண்டுகிறேன். நான் அந்த சமயத்தில் மைசூரிலிருந்தமையால் என்னுடைய கடைசி மரியாதைகளை மரணமடைந்த என் இனிய அன்பருக்குச்செலுத்தக் கூடாதவனாயினேனென்று சஞ்சலப்படுகிறேன். ஆயினும் என்னுடைய இருதயம் அவரிடத்திருந்த தென்று நான் நிச்சயமாய்ச் சொல்லுகிறேன்."

---

இந்தூர் சமஸ்தான தீவானும், டிப்டி கலெக்டருமா யிருந்த தீவான் பஹதூர் R. இரகுநாதராவ் அவர்கள் எழுதிய கடிதம்:—

"என்னுடைய பழயநேசரும் தங்கள் தந்தையுமாகிய இராஜ தர்மபிரவீண தம்புசெட்டியார், C.I.E., அவர்களின் மரணச்செய்தியைத் தெரிவித்த தங்கள் கடிதத்தைப் பெற்றேன். மறுலோகத்தில் சந்தோஷத்துடன் அவருடைய ஆத்துமம் இளைப்பாறு மாகையால் இம்மரணத்தினால் அவருக்குயாதொரு நஷ்டமு மில்லை. நாம் அவருடைய ஆதரவையிழந்தவர்களாய் கடவுளின் மெய்யான ஒரு ஊழியனின் சமுகத்தையும், புத்திமதிகளையும் அடையக்கூடாதவர்களாயினோம். என் அனுதாப உணர்ச்சிகளைத் தாங்கள் அங்கீகரிப்பதன்றி தங்கள குடும்பத்தோர்க்கும் தெரிவிக்க வேண்டுகிறேன்."

---

மதராஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் அப் ரெஜிஸ்ட்ரேஷன் (Inspector-General of Registration) ஆகவிருந்த தீவான் பஹதூர் P. இராஜரத்தின முதலியார், C.I.E., அவர்கள் வரைந்த கடிதம்:—

"மிகவும் சங்கிக்கப் பெற்ற தங்கள் தந்தையின் மரணச்செய்தியை யறிய மிக்க சஞ்சல முற்றேன். மைசூர் சமஸ்தானத்துக்கும், பொதுவாய் எல்லா ஜாதி சுதேசக் கூட்டத்தார்க்கும் பெரியநஷ்டமுண்டானது. நான்பார்த்த சுதேச கனவான்களில் இவர் முதன்மையான குணவிசேஷங்களை யுடைத்தான வராக இருந்தனர். தமதந்தரங்க ஜீவியத்திலும், உத்தியோக வாழ்க்கையிலும் பிறர் பின்பற்றத் தக்க உதாரண நடையுடையவராயிருந்தார். இவ்வித தாரதம்மிய முடையவர்கள் கொஞ்சம்பேர் மாத்திரம் கிடைக்கக்கூடும். அவர் இன்னுஞ் சில வருஷங்கள் ஜீவனோடுஇருந்திருக்க வேண்டுமென்பது என்னுடைய கோரிக்கை. நமக்கு நன்மையான தெதுவோ அது கடவுளுக்குமாத்திரம் தெரியும். தாங்களும் தங்கள்சகோதரர் சகோதரிகளும்,தங்கள் நல்லதாயாரும் இப்பெருந் துன்பத்தை நல்லமனதோடு சகித்துக்கொள்ளப் பிரயாசைப்படுவீர்களெனக் கோருகிறேன். உங்களனைவருக்கும் என் மனப்பூர்வமான அனுதாப உணர்ச்சியைத் தெரிவிக்கிறேன்."

---

மைசூர் இராஜ்ஜியத்தைச்சேர்ந்த சிவமுகி டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட்டும், டெப்யுடி கம்மிஷனருமாயிருந்த M. S. நாராயணராவ் அவர்கள் எழுதிய கடிதம்:—

"மிகவுஞ் சங்கிக்கப்பெற்ற தங்கள் தந்தையாரின் மரணச்செய்தியைக் கேள்விப்பட்டு நான் மெத்தவுந் துக்கித்தேன். அவர் அதிக வயதுள்ளவராய் ஜீவித்து அவருடைய புத்திரர்களெல்லாம் உத்தியோகவாழ்க்கையில் அமர்ந்திருக்கப்பார்த்து மரித்தாரென்பதற்குச் சந்தேகமில்லை. எல்லோரும் புகழத்தக்க விதத்தில் தம்முடைய வேத அனுஷ்டானங்களையும், தருமகாரியங்களையும் மிக்க அறிவோடும் விமரிசையோடும் நடத்தினரென்பது உண்மை. அப்படிச்செய்கிறவர்கள் இப்பூலோகத்தில் கொஞ்சம்பேர் மாத்திரமே. அவர்கடவுளால் நேசிக்கப்பட்டு அவருடைய திருச்சமுகத்தினருகில் தமதிடத்தைச் சம்பாதித்துக்கொண்டார். அவருடைய பிள்ளைகளெல்லாம் அவர் நடந்தவழியைப் பின்பற்றி அவருடைய குடும்பத்தின் கீர்த்தியை நிலைநிற்கச்செய்து வருகிறார்கள். அவர் பிரிவால் காலியாயின இடத்தை நிறப்பத்தகுதியான வேறொருவர் கிடைக்கமாட்டார். தங்களுடைய வயதுதளர்ந்த தாயாரை ஆறுதல் படுத்துவது தங்களுக்குக் கஷ்டமுள்ளகாரியமாயிருக்கும். உங்களுக்கு நேர்ந்த இப்பெரிய துன்பத்தை நினைந்து வருந்தி அனுதாபப்படும் உங்கள் திரண்ட நேசர்களில் என்னையும் ஒருவனாகச் சேர்க்கும் பெருமையை யுடைத்தாயிருக்கின்றேன். உங்கள் சஞ்சலங்களை நன்மனதோடு சகித்துக்கொண்டு, இரக்கம் நிறைந்தகர்த்தாவின் திருச்சித்தத்துக்கமைந்து, உங்கள் துன்பத்தை அவருக்கு ஒப்புக் கொடுக்கும்படி வேண்டுகிறேன்."

---

பெங்களூர் டெப்டிகம்மிஷனர (Deputy Commissioner) ராக விருக்கும் D. தேவராஜ அரசு அவர்கள் வரைந்த கடிதம் :—

"கௌரவம்பொருந்திய எல்லோராலும் மதிக்கப்பெற்ற தங்கள் தந்தை இகலோக வாழ்வைவிட்டு நீங்கினரென்றறிய அதிக விசனமுற்றேன். இச்செய்தியாலுண்டாகிய துக்கத்தையும் இவர்பிரிவால் இச்சமஸ்தானத்துக்கு நேர்ந்த நஷ்டத்தையும் பற்றிச் சொல்லமுடியாது. கடவுள் இவரை இன்னுஞ் சிலகாலம் ஆயுளோடு வைத்திருந்தால் இச்சமஸ்தானத்துள்ளயாவருக்கும் மகிழ்ச்சியைத் தந்திருக்கும். ஆனால் தெய்வதிருவுளம் நிறைவேறுவது தப்பாது. இப்பெருந்துன்பத்தைதைரியத்தோடு சகித்துக்கொள்வீர்களென்று கோருகிறேன். உங்களுக்கு நேர்ந்த சஞ்சலத்துக்காக நான் கொள்ளும் அனுதாப உணர்ச்சிகளைத் தங்கள் சகோதரர்களுக்கும் மற்றவர்களுக்கும் தெரிவிக்கும்படியாய் வேண்டுகிறேன்."

---

மதராஸ் ஹைகோர்ட்டு வக்கீலும் பிரபுவுமாகிய இராமசந்திர ராவ் சாஹேப் அவர்களின் கடிதம் :—

"தங்கள் கடிதம் பார்த்து மதிக்கப்பெற்ற தங்கள் தந்தையின் நிற்பாக்கிய மரணச்செய்தியறிந்து மிதமற்ற சஞ்சலமடைந்தேன். அவர் இந்திய கூட்டத்திற்கோர் ஆபரணமாகத் துலங்கி நின்றனர். அவர் மரணத்தால் நாம் பரிகரிக்கக் கூடாத நஷ்டத்தை யடைந்தோம். தங்கள் குடும்பத்துக்கு நேர்ந்த இப்பெரிய துன்பத்துக்காக மிகவும் வருந்தினது அனுதாப உணர்ச்சிகளைத் தங்களுக்கும், தங்கள் குடும்பத்தாருக்கும் தெரிவிக்கின்றேன்."

சென்னைநகர் மாஜிஸ்ட்ரேட் சுல்த்தான் மோஹிதீன் சாய்பு அவர்கள் கடிதம் :—

"தங்கள் 21உ கடிதம் கைக்கெட்டியது. என்றால் மிக மதிக்கப்பட்ட நேசராகிய தங்கள் தந்தையின் மரணச்செய்தியையறிய மெய்யாகவே பெருந்துக்கத்தை யடைந்தேன். தங்கள் கடிதம் வருமுன்னரே அவர் மரணத்தைப் பற்றியும் அடக்கச் சடங்கினைப்பற்றியும் இவ்வூர் வர்த்தமானப் பத்திரிகைகளில் வாசித்தறிந்தேன். இந்தசம்பவம் நிற்பாக்கியமுள்ள இடிபோல உங்களைத் தாக்கியதென்பதிற் சந்தேகமில்லை. பொறுமையோடும் தைரியத்தோடும் இதை நீங்கள் சகித்துக்கொள்ளவேண்டும். இவர் மரணம் தங்களுக்கும் தங்கள் குடும்பத்தினர்களுக்கு மாத்திரமல்ல, சுதேசக் கிறிஸ்துவர்களின் கூட்டத்துக்கே பரிகரிக்கக்கூடாத நஷ்டத்தை யுண்டாக்கியது. உங்களுக்கு நேர்ந்த இப்பெருந் துன்பத்திற்காக மெத்த உருக்கத்தோடு அனுதாபப்படுகிறேன்."

---

இராஜா சர் சவலை இராமசாமி முதலியார் எழுதிய கடிதம் :—

"தங்கள் பிதாவின் மரணச்செய்தி என்னை பெருந்துக்கத்தில் மூழ்க வைத்தது. அவருடைய அசௌக்கியத்தைப்பற்றிச் சில தினங்களாக எனது நேசர்களை விசாரித்துக் கொண்டிருந்தேன். நான் எண்ணியபடி அவருக்குண்டான நோய் தீர்ந்து குணப்படாததற்காக விசனப்படுகிறேன். அவருடைய மரணம் உங்களெல்லோருக்குஞ் சொல்லொண்ணாத் துக்கத்தை வருத்தியிருக்க வேண்டும். தங்கள் தாயாருக்கு விசேஷமாய் தக்க ஆறுதல் சொல்லி தைரியப் படுத்தவேண்டும். அவர்களுக்கு எனது அனுதாப உணர்ச்சிகளைத் தெரியப் படுத்தும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். கடவுள் உங்களுக்கு நல்லாறுதல் தந்து நேர்ந்த துன்பத்தைச் சகித்துக்கொள்ளச் செய்வாராக."

---

மதராஸ் ஹைகோர்ட்டு இன்டெர்பிரிட்டர் (Interpreter) ம-਼ா-਼ா-ஸ்ரீ இராமகிருஷ்ண பிள்ளை எழுதிய கடிதம் :—

"நேற்று இராத்திரி வெளிப்பட்ட மதராஸ் மெயில் பத்திரிகையில் விளம்பரப்படுத்திய இத்துக்கசெய்தி எங்களை ஒரு இடிபோல் தாக்கியது. தாங்கள் கடைசிவிசை எழுதிய கடிதம் தங்கள் தந்தைக்குண்டான நோயினின்று மீண்டு சௌக்கியமடைவாரென்னும் கோரிக்கை கொள்ளச்செய்தது. தங்கள் பிதாவின் மரணசமாசாரம் கொண்டுவந்த தங்கள்கடிதம் இன்றுகாலை என்னிடம்சேர்ந்தது. எனக்குண்டான சஞ்சலத்தைச் சரியாயெடுத் துரைக்கத் தகுதியான வார்த்தைகள் என்வசத்திலில்லை. மரணித்த மிஸ்டர் தம்புசெட்டியார் சத்தியவான்; சற்குணசொரூபி; பெரியகனவான்; அவரைப்போலொத்த இன்னொருவரைக் கண்டுபிடிப்பது மகாபிரயாசை. இன்னும் விஸ்தரித்துப் புகழ என்னாற் சக்தியில்லை. செட்டியார் தீவான் இரங்காசார்லு மரணத்தைப்பற்றிச் செய்த வியாசத்தின் முடிவிற் சொல்லிய அடியிற்கண்ட இரண்டொரு வாக்கியங்கள் செட்டியாருக்குஞ் சொல்லப் பொருந்துமாகையால் அவைகளை இங்கெடுத்துக்காட்டி இக்கடிதத்தை முடித்து விடுகிறேன் :—

"இச்சமயத்தில் மரணித்தவரை எழுப்பி அவரைக்கேட்கும்படிச் செய்யக்கூடுமாகில், பெரிய வோர் வித்துவான் சொல்லியபடி, கோரி முதலியவை கொண்டு காட்ட அவசியமில்லாத சாஸ்வத அடையாளச் சின்னமாக நீர் இருக்கிறீர். நீர் எழுதியவைகள் எவ்வளவு காலம் வரை யிருக்குமோ அவ்வளவு காலமும் நீர் ஜீவந்தராகவே யிருப்பீர். எங்களுக்கு அவைகளைப் படிக்கவும் புகழவுந்தக்க அறிவுண்டு."

"இவ்வாக்கியங்கள் எவ்வளவு உரிமையாய் உண்மைக்குத்தாரமாய் தம்பு செட்டியாரின் ஊழியங்களை எடுத்துக்காட்டுகிறதென்று நான் சொல்லவேண்டியதில்லை. ஆனால், ஓர் மனுமாத்திரந் தங்களையும் தங்கள் குடும்பத்துள்ள மற்றவர்களையும் கேட்டுக்கொள்ளுகிறேன். இப்போது நேர்ந்த துன்பத்தை மனதிலுன்னி வருந்த வேண்டாம். கடவுளின் சித்தமிதுவாகையால் உங்களின் நன்மைக்காகவே இது இருக்குமென்பது திண்ணம். சிலநாள்களுக்குமுன் செட்டியாரின் ஞாபகார்த்தச் சின்னமொன்று அமைக்க முயற்சிசெய்து வருவதாகப் பிரஸ்தாபமாயிற்று. அப்படியிருக்குமாகில் அது விஷயமாய்த் தாராளமாய் என்கையொப்பத் தொகையொன்று கொடுக்கச் சந்தோஷமாய்க் காத்திருக்கின்றேன்."

---

தட்சண தேச இந்து கத்தோலிக்குச் சங்கத்தின் பிரிவுகளில் ஒன்றான சென்னை அர்ச்: அடைக்கல நாயகி ஆலயக் கிளைச் சங்கத்தின் காரியதரிசி ம-ா-ா-ஸ்ரீ V. S. சூசைபிள்ளை யிடமிருந்து வந்த கடிதம் :—

"மகா கௌரவம் பொருந்திய தங்களருமைபிதாவின் மரணச்செய்தி, தக்ஷண தேச இந்துக் கிறிஸ்துவர்களெல்லோரையும், விசேஷமாய், அர்ச்: அடைக்கல நாயகி யாலயத்தைச்சேர்ந்த கிறிஸ்துவர்கள் யாவரையும் துக்க சாகரத்தில் மூழ்கச்செய்தது. அக்கனவானை யலங்கரித்த அநேக சுகிர்தபுண்ணியங்களையும் குணாதிசயங்களையும்பற்றி விரிவா யெடுத்துரைக்க வேண்டியதில்லை. அவர் பிரிவால் கத்தோலிக்கு கிறிஸ்துவக்கூட்டத்தினை யலங்கரித்த நம்பிக்கையுள்ள வொருதலைவரை நாமிழந்தோமென்று சொல்வதே போதுமானதாயிருக்கும். மயிலாப்பூர் மேற்றிராசனஞானஅதிகாரம் நிலைபெற்றுவருமிடங்களில், முக்கியமாய் நம்முடைய கோவிலில், அவருடைய தயாளகுணத்தையும், தாத்ருவத்தையும் ஞாபகத்தில் வருவிக்கத்தக்க அநேக அடையாளங்களிருக்கின்றன. அவைகளெல்லாம் நம்மெல்லோருடைய நன்றியறிதலைக்காட்டும்படி நம்மைத் தூண்டுகின்றன. அவரிடமிருந்து அடைந்த பலநன்மைகளுக்குப் பிரதிசெய்யக் கூடாத அந்தஸ்திலிருக்கும் நாங்களெல்லோரும் ஒன்றாய்ச் சேர்ந்து அவரினிய பத்தினியாருக்கும் அவர் குடும்பத்தைச்சேர்ந்த உங்களெல்லோருக்கும் நேர்ந்த துன்பத்தை மிக்க உருக்கத்தோடுணர்ந்து, எங்கள் மனப்பூர்வமான அனுதாபங்களை வெளியிட்டுத் தெரிவிப்பதுமன்றி, மரித்த உத்தமவாளரது ஆத்துமம் நித்தியமோட்சானந்தத்தி லிளைப்பாரச்செய்யக் கிருபாநிதியாகிய கடவுளைப் பிரார்த்திக்கின்றோம்."

"இந்தமாதம் 23உ யன்று, மேற்படி சங்கத்தார்கூடிய கூட்டத்தில், உமது பிதாவின் பிரிவினால் உங்களுக்கு நேர்ந்த சஞ்சலத்தை யுணர்ந்து வருந்தும்

இச்சங்கத்தாரது அனுதாப உணர்ச்சிகளை உங்களுக்குத் தெரிவிக்கவேண்டு மெனச் சர்வசம்மத யேகவாக்காய் செய்த தீர்மானத்தை உங்களுக்குத் தெரிவிப்பதோடு, மரணமடைந்த தங்கள் பிதாவின் ஆத்தும இளைப்பாற்றிக்காகப் பெரிய பூசை செய்வித்து இக்கோயிலைச் சேர்ந்த கிறிஸ்துவர்களெல்லோரும் வேண்டிக் கொண்டார்களென்றும் அறிவிக்கின்றேன்."

"செட்டியாரின் ஞாபகார்த்தமாக சாஸ்வத அடையாளமொன்று பெங்களூர் ஹைகோர்ட்டில் ஸ்தாபித்து வைப்பதற்கான முயற்சிசெய்ய ஆரம்பித்திருப்பார்களென இச்சபையார் கோருகின்றனர்."

---

மேற்படி இந்து கத்தோலிக்குச் சங்கத்தின் அர்ச்: சவேரியார் கோவில் கிளைச் சங்கத்தார் சூன்மீ 30உ கூடிய கூட்டத்தில், தம்பு செட்டியார் மரணத்தால் அவர் குடும்பத்தினருக்கு நேர்ந்த துன்பத்தை யுணர்ந்து அனுதாபப்படுகிறதாகத் தீர்மானஞ்செய்து, அத்தீர்மானத்தை அச்சங்கத்தின் காரியதரிசி மிஸ்டர் A. C. அற்புதசாமி பிள்ளையைக் கொண்டு வரைந்தனுப்பினர்.

---

பெங்களூர் The Young Men's Christian Association என்னும் சங்கத்தார் சூன்மாதம், 22உ யன்று கூட்டங் கூடிச்செய்த தீர்மானத்தில், தம்புசெட்டியார் இறந்தமைக்காகத் தாங்கள்கொள்ளும் அனுதாப உணர்ச்சிகளை மேற்படி சங்கத்தின் காரியதரிசி மிஸ்டர் A. A. Ward துரை மூலமாய்தெரியப்படுத்திக், காலஞ்சென்ற தம்பு செட்டியார் இச்சங்கத்தின் மீது வைத்திருந்த அபிமானத்தைப் போல் அவருடைய சந்ததியாரும் தங்கள் ஆதரணையையும் அன்பையும் இச்சங்கத்தின் மீதுவைத்திருப்பார்களென நம்பியிருப்பதாக வரைந்தனர்.

---

மங்களூரைச்சேர்ந்த கர்க்கல் என்னும் ஊரின் கத்தோலிக்குச் சங்கத்தின் காரியதரிசியும்,

மதராஸ் முத்தியாலுபேட்டை (Benevolent Refectory) என்னும் ஏழைகளுக்கு அன்னமும் ஆடையும் தந்தாதரிக்கும் உபகாரச் சங்கத்தின் காரியதரிசியும்,

பெங்களூர் சென்ட் மார்த்தா ஆஸ்பத்திரியிலுள்ள நல்ல ஆயன சபைக் கன்னிகைகளின் கூட்டத்தின் சிரேஷ்டதாயாரும்,

கோலார் சாம்பியன் ரீப்ஸ் அர்ச். சூசையப்பர் மடத்துக் கன்னிகைகளும்,

பெங்களூர் சூளை (Little Sisters of the Poor) என்னும் ஏழைகளைப் போஷிக்குஞ் சபைக்கன்னியாஸ்திரிகளும்,

மைசூர் மாகாணத்தைச் சேர்ந்த ஹாசன் நகரிலுள்ள பிராமண ரல்லாத இதர ஜாதி ஜனங்களின் சங்கத்தார்களும்,

வரைந்த அனுதாபக் கடிதங்களில், தம்புசெட்டியாரின் பெருந் தன்மையையும், அவரது தயாள குணத்தையும் பற்பல விதமாய் வர்ணித்துப் புகழ்ந்தனர்.

---

இந்தியா தேசத்திலும் பிறவிடங்களிலும் பிரசுரிக்கப்படுகின்ற பலவிர்த்தாந்தப் பத்திரிகைகளில் தம்புசெட்டியாரின் மரணச்செய் தியை விளம்பரஞ்செய்து, அவர் தமதுமேலான உத்தியோக வாழ்க் கையிலடைந்த பிரதாபத்தைப்பற்றியும், அவருடைய நற்குணநற் செய்கைகளைப் பற்றியும் உலகோர்கொண்ட நல்லெண்ணங்களை வெளிப்படுத்தி அவரை வெகுவாய்ப் புகழ்ந்துபேசின. அவைகளை யெல்லாம் இங்கு சொல்லப்புகில் புத்தகம் விரியுமென்றஞ்சி, செட் டியார் விசேஷப் பிரபலமடைந்து விளங்கிய மைசூர்சமஸ்தானத்தில் வெளியாகும் இரண்டொருபத்திரிகைகள் எழுதியவைகளை மாத்தி ரம் இதனடியில் மொழிபெயர்த்தெழுதுகிறோம்:—

மைசூர் நகரத்தில் பிரசுரிக்கப்படும் மைசூர் கட்டியக்காரன் (*The Mysore Herald*) என்னும் பத்திரிகை பின்வருமாறு கூறியது:—

"மைசூரில் மிக்க சிறப்புற்றோங்கிப் பிரதாபமடைந்த விருத்தாப்பியக் கனவானாகிய இராஜ்தர்மப்பிரவீண தி. இரா. ஆ. தம்பு செட்டியார், C. I. E. அவர்களின் விசேஷ விதத்தில் குறிக்கொள்ளத்தக்க வாழ்க்கை இந்த மாதம் (ஜுன்) 19உ யன்று மாலையில் முடிவுபெற்ற செய்தியை மிதமற்ற விசனத்தோடு இப்பத்திரிகையில் நாம் வெளிப்படுத்துகிறோம். இவர் மதராஸ் மாகாணத்தில் சிலவருஷங்கள் உத்தியோகஞ் செய்துப் பெயர்பெற்று, மைசூர் துரைத்தனச் சேகவத்தில் ஜுடிஷியல் கம்மிஷனர் கோர்ட்டுஹெட் சிரஸ்ததாராகச் சேர்ந்து, 33-வருஷகாலம் பற்பல அதிகாரமுள்ள உத்தியோகங்கள் செய்தனர். சீப் கோர்ட்டின் தலைமை நீதிபதியாகவும், மைசூர் மஹாராஜாவின் மந்திராலோச னைச் சங்கத்துத் தலைமை மெம்பராகவும், மைசூரின் தீவானாகவுமிருந்து, அத்தேச சரித்திரத்தில், இணையொப்பின்றி நீதிநெறி விலகாமலும், நடுநிலை மையோடும், இராஜபக்தி விஸ்வாசத்தோடும் மைசூராட்சியில் தொழில் புரிந் தனர். இவர் கிறிஸ்துவேதத்தினரானாலும், ஜாதியாசார முறைமைகளைச் சரியா யாசரித்து நின்றவர். மதராஸ் என்னும் சென்னப்பட்டண வாசியாயினும், மைசூரிராஜ்ஜிய ஜனங்கள் தமது சொந்த வகுப்பினராகவும், சுற்றத்தவர்களாக வும் பாவித்துவந்தனர். காலஞ்சென்ற ஸ்ரீ சாமராஜேந்திர உடையர் பஹதூர் மகாராஜாவாலும், தத்காலத்தில் அரசுபுரிந்துவரும் ஸ்ரீ கிருஷ்ணராஜ உடையர் பஹதூர் மகாராஜாவாலும், முன் ரீஜெண்டாகவிருந்து அரசாட்சிசெய்த ஸ்ரீ வாணிவிலாச சந்நிதான மஹாராணியார், C. I., அவர்களாலும், நன்குமதிக் கப்பெற்று அவர்களின் மேலான மரியாதைக்குப் பாத்திரரானவர். நன்னெறி

யிலும், பரிசுத்தத்தன்மையிலும் எவ்விதமாய் நிகரற்றுநின்றனரோ, அவ்விதமே யாதொரு தயை தாட்சண்யத்துக்கிடங்கொடாமல் தமது மனசாட்சிக்கேர்ப்ப நடக்கும் நடையுடையவராய் விளங்கினர். உத்தியோகவாழ்க்கையில் யாவரையும் சீர்திருத்தி நலம்பெறச்செய்யும் சக்தியுடையவரா யிருந்ததுபோலவே, உத்தமகுணங்களைப் படிப்பித்து உதாரணநடையுடன் காட்டும் ஆசானை யொத்து விளங்கினர். சகலஜாதி ஜனங்களுடைய மரியாதையை ஏராளமாய்ப் பெற்றவர். இப்போது தம்புசெட்டியார் தம் முன்னோர்களுடன் சேர்ந்துக் கொண்டார். அவருடைய சரீரம் மாய்ந்ததற்காகமாத்திரம் நாம் விசனப்பட வேண்டியவர்களா யிருக்கிறோம். அவருடைய நல்லொழுக்கம், கல்வி, யறிவு முதலிய கீர்த்திப் பிரதாபங்கள் என்னாளும் பிரகாசிக்குமாகையால் அவர் நம்மோடு எப்போதுமிருக்கிறாரென்றே சொல்லவேண்டும். துரைத்தன உத்தியோகத்தை நடத்தும்போதும் மற்றகாலங்களிலும் நீதிநெறியில் அவர் நடந்து காட்டிய உதாரணநடை உத்தியோகஸ்தர்களாலும், மற்றவர்களாலும் பின்பற்றத்தக்கச் சின்னங்களாக என்னாளுமிருக்கும். மஹாராணியவர்கள் ரீஜெண்டாகவிருந்து மைசூர் அரசாட்சியை நடத்துங்காலத்தில், மைசூரில் பிரசுரிக்கப்பட்டு வந்த வர்த்தமானபத்திரிகைகளில் ஒன்றை துரைத்தனத்தார் உத்தரவுப்படி நிறுத்திவிடும்படியாயிருந்தது. தம்புசெட்டியார் அப்படிச்செய்வதற்கிடந்தரவில்லை. யாதொன்றையும் விருத்திப்படுத்திப் பலப்படச்செய்வதைவிட்டு அதை நாசப்படுத்துவது தமது கொள்கையல்லவென்று சொல்லினர். வழுவிய பத்திராசியரை வரவழைத்து, அவருடன் உரையாடி தர்க்கித்து, அவர் வழுவியதற்குப் பரிகாரமாகத் துரைத்தனத்திற்கும் தனக்குங் கவுரவமாகும் விதத்தில், தான் வழுவியதற்காக விசனமுறுவதாயும் அதைத் துரைத்தனத்தார் க்ஷமிக்கவேண்டுமென்றும் பத்திரிகைமூலமா யெழுதிப் பிரசித்தஞ்செய்யும்படிச் சொல்லினர். மிஸ்டர் மாதவராவ் மைசூர் தீவானாக் நியமிக்கப்பட்டபோது, செட்டியார் அவருக்கு நேசப்பற்றுதலோடு பின் வருமாறு புத்திகூறினர்:— "உத்தியோகபதவிகளை யளிக்கும் சுதந்தரமென்னுங் கற்பாறையில் சுதேசாதிகாரிகள் தங்களில் விளங்கிய பாரபட்சகுணத்தை மோதவைத்து தங்களுடைய மதிப்பையும் கீர்த்தியையும் நஷ்டப்படுத்திக் கொள்ளுகிறார்கள். உம்முடைய நன்மையை விரும்பி நான் உமது மட்டில் கொண்டிருக்கும் சிரத்தையானது, தேச அரசாட்சியை நடத்திப் பேர்பெற்று விளக்கமுற நீர் என்னசெய்ய வேண்டியதென்று என் புத்தியிற்பட்ட சிலவிஷயங்களை உமக்குச் சொல்லும்படி என்னை யேவுகின்றது. உத்தரவாதமும் நம்பிக்கையுமுள்ள உத்தியோகஸ்தானங்களுக்கு மனுஷரைத் தெரிந்தெடுக்கையிலும், உத்தியோகஸ்தர்களின் சம்பளங்களை உயர்வுபடுத்துவதிலும், நமது சொந்த ஜாதியாரென்றும், உறவினரென்றும், சிநேகிதர்களென்றும் மனதிற் கொள்ளக்கூடாது. தெரிந்தெடுக்கப்பட்டவர்களது திறத்தையும் யோக்கியதா பட்சத்தை மட்டுமே முக்கியமாகக் கவனிக்கவேண்டும். இப்படி நாம் செய்வோமேயாகில், நம்மருகிலிருப்பவர்களும் நமதன்புக்குரியவர்களு மாத்திரமல்ல, நம்மைத் தெரியாதிருக்கிறவர்களும், நம்மை நேசிக்கத்தக்கக் காரணமின்றி யிருப்பவர்களும், நமக்கு முக்கியநேசர்களாகவும், நமது முயற்சியையும் செய்கைகளையும் தாங்கி யாதரிப்பவர்களாகவுமாவார்கள்." தம்புசெட்டியார் மிஸ்டர் மாதவராயருக்குணர்த்திய மேற்சொன்ன வழிப்பாடுகளின்படியே தாம் நடந்தவராகையால் அவைகளை யப்படியே மிஸ்டர் மாதவராயருக்கு உபதேசித்தனர். இந்த புத்தியை சொன்னவர்

போய்விட்டாராகிலும் சொன்ன புத்தி நின்றிருக்கிறது. இதுவரையிலும் மிஸ்டர் மாதவராயர் மேற்சொன்ன புத்திமதிக்கிணங்க நடந்து காட்டவில்லை. இனிமேலாகிலும் அதைப் பின் செல்லாமலிருப்பாரென்று நாம் எப்படிச் சொல்லலாம்? தங்களைப்போல் பிறரைப்பாவிக்கும் எல்லா அதிகாரஸ்தர்களும் உத்தியோகஸ்தர்களும் பின்பற்றத் தக்கதான மேற்கூறிய புத்தி அவர்கள் மனத்திற் படுமென்பதற்குச் சந்தேகமில்லை. இக்கனவான் வாழ்க்கையைச் சிறப்பித்த அநேக சற்குணங்களைப்பற்றிச் சொல்லவென்றால் இப்பத்திரிகையிலுள்ள இடம் போதாதாகையால், அவைகளை விவரிக்காமல் விட்டுவிடுகிறோம். ஆகிலும் மைசூர் அரசாட்சியை நடத்திய அதிகாரஸ்தர்களின் அட்டவணையில் எந்த விடத்தில் தம்புசெட்டியார் தம் பெயரைப்பதியப் பாத்திரம் பெற்றாரென்று பாரபட்சமின்றி யோசித்துச் சொல்லவேண்டுமெனில், மிஸ்டர் இரங்காசார்லு, மிஸ்டர் சென்ஸல்ராவ் இவர்களின் அருகில் அதைச் சேர்க்கலாமென்று யாம் சொல்லத்துணிவோம். மேற்சொன்ன இரங்காசார்லும், சென்ஸல்ராவும் செட்டியாரைப்போலவே கல்வியறிவிலும், நன்னெறியிலும் மேன்மைபெற்று உயர்ந்து நின்ற மனிதர்களாகும். செட்டியாரின் சரீர அடக்க சம்பவம் ஒன்றே ஜனங்கள் அவர்மீது எவ்வளவு மதிப்பும் மரியாதையுங் கொண்டவர்களாயிருந்தார்களென்று காட்டியது. அவருடைய பிரேதம் கல்லறைக்குக்கொண்டுபோகப்பட்ட வைபவத்தைப்போல் வேறொன்று இனிமேல் காண்பதரிது. ஆங்கில ராஜாங்கப் பிரதிநிதியாக மைசூரில் வீற்றிருக்கும் ரெஸிடெண்ட் ஹானரெபில் மிஸ்டர் வில்லியம்ஸ் (British Resident, the Honorable Mr. A. Williams) துரையும் கணக்கற்றுப் பெருங் கூட்டமாகச் சேர்ந்த ஐரோப்பிய கனவான்களும், சுதேச அதிகாரிகள் முதலியோரும், செட்டியாரின் பிரேதத்தைக்கொண்ட பல்லக்கைச்சூழ்ந்து நடந்துவந்து அவரைக் கவுரவப்படுத்தினார்கள். செட்டியாரின் மரணச்செய்தி மைசூருக் கெட்டியபோதே மஹாராஜா அவர்களும் இராஜகுடும்பத்தவர்களெல்லோருஞ் சஞ்சலத்திலாழ்ந்தினர். உத்தியோகசாலைகளும், கோர்ட்டு கச்சேரிகளும், வித்தியாசாலைகளும், வர்த்தக சாலைகள் முதலியவும் மூடப்பட்டன. பெங்களூரிலும் அவ்விதமே நடக்கும்படி மஹாராஜா அவர்கள் தட்சணமே ஆக்யாபித்தனர். செட்டியார் போர்ந்த வயதுள்ளவராக ஜீவித்திருந்து மரித்தார். அவருடைய புத்திரர்களெல்லாம் நல்ல அந்தஸ்திலிருக்கிறார்கள். தமது முடிவுகாலத்தை மனநிம்மதியோடும், சந்தோஷத்தோடும் போக்கத்தடையாக ஒன்றும் அவருக்கிருந்ததில்லை. அவர் பாக்கியமான மரணத்தை யடைந்தார்; என்றாலும், அவர்பிரிவால் அவர் குடும்பத்தார்களுக்கும், பொதுவாய் ஜனங்களெல்லோருக்கும், நேர்ந்த நஷ்டம் பரிகரிக்கக் கூடாததாயிற்று. மைசூர் இராச்சியத்திற்கு ஒரு சூரியனைப் போலிருந்து பிரகாசித்தார். அவரிடத்தில் வைக்கத்தக்க சரியான இன்னொருவரைக்காண்பதும், இராஜ தர்மப் பிரவீணராகிய அவரை ஜனங்கள் மதித்து மரியாதைப் படுத்தியதுபோல் இன்னொருவருக்குச் செய்ய நேருமென்பதும், கூடாதகாரியமென்று நினைக்கிறோம். செட்டியாருடைய குடும்பத்தார் படும் துக்கத்தை நினைத்து வருந்தி எமது அனுதாப உணர்ச்சிகளை அவர்களுக்குத் தெரியப்படுத்துகிறோம்."

---

பெங்களூரில் பிரசுரஞ் செய்யப்பட்டு வருகிற மைசூர் வெற்றிக்கொடியோன் (*The Mysore Standard*) என்னும்பத்திரிகையின்

ஜூன்மாதம் 22௳ சனிவார சஞ்சிகையில் செட்டியாரின் மரணச் செய்தியைப் பிரசித்தஞ்செய்து, அவர் சென்னபட்டணத்தில் ஆரம்பித்த உத்தியோகவாழ்க்கை மைசூர் தீவான் பதவியோடு முடிவு பெற்றசரிதையை சங்கிரகமாகக் கூறி அவ்வாழ்க்கையில் அவர் அடைந்த கீர்த்தியையும் வெற்றியையும் பற்றிப்புகழ்ந்து பின்வருமாறு வரைந்தது:—

"தம்பு செட்டியாரின் சரீர அடக்கச் சடங்கு குருவாரம் நடந்தது. அடக்கத்திற்கு வந்திருந்தவர்களின் தொகை எண்ணிமுடியாது. பிரிட்டிஷ் ரெஸிடெண்டு முதல் துரைத்தன அதிகாரர்களும், உத்தியோகஸ்தர்களும் பெருங்கும்பலாக வந்திருந்ததல்லாது, இவரது பிரிவுக்காகத் துக்கப்பட்டு அனுதாப உணர்ச்சிகளைத் தெரிவித்த தந்தி செய்திகளும், கடிதங்களும் எல்லாத் திசைகளிலிருந்தும் திரண்டுவந்தன. இஃதொன்றே, மரித்த செட்டியாரை எவ்வளவுமேன்மையோடும், மதிப்போடும், மரியாதையோடும் ஜனங்களெண்ணினார்களென்பதை விளக்கிக்காட்டுகின்றது. இவருடைய மரணத்துக்காகப் படுஞ் பெருந்துக்கமும் இவரது மேலான ஜீவியத்தையும் உத்தியோக வாழ்க்கையின் மேன்மையையும் எண்ணிப்படும் ஆச்சரியமும்போல், பொது ஜனங்களின் அனுதாபமும் மதிப்பும் பெறப்பாத்திரமுள்ள வேறொருவர் இச்சமஸ்தானத்தில் இக்காலத்திலில்லையெனச் சொல்லலாம். கட்சிவாதங்களுக்கும், பொறுமைக்கும் இடங்கொடாமல், பொதுக்காரியங்களில் உண்மையையும், பரிசுத்தத்தனத்தையும் கைப்பிடித்து மைசூர் ஜனங்களின் நன்மைக்காக எப்போதும் மனமாறப் பாடுபட்டுழைத்தவரும், எந்த விஷயத்திலும் பாரபட்சமின்றி நடுநிலைமையாக அபிப்பிராயஞ் சொல்லத்தக்கவராகப் பிரஜைகளால் எதிர்பார்க்கப்பட்டவரும் இவர் ஒருவரே. சாதாரணமாய் உத்தியோகஸ்தர்களில் வழங்கிவரும் தந்திரோபாய நெறிதப்பிய கிருத்தியங்களுக்கு ஒருக்காலு முடன்படாது நின்றவர் இவரே. இவர் சாந்தசொரூபியாதலால் அதிகாரஞ் செலுத்துவதில் கடினமாய்ப் பிரவர்த்திக்கும் தன்மை இவரிடத்திலில்லாதிருந்தாலும், நீதிபதியென்னு முறையில் இவர் கொடுத்த அபிப்பிராயங்களும் செய்த தீர்மானங்களும் சரி நிறையாய் முதிர்ந்த யோசனையோடும் பிறர் குற்றங்கூற இடந்தராவகையிலுமிருந்து இவருடைய கீர்த்தியைப் பிரகாசிக்கச்செய்தன. மந்திராலோசனைச் சங்கத்தின் அங்கியாகவிருந்து இவர் கொடுத்த அபிப்பிராயங்கள் இவருடைய விவேகத்தின் உன்னதத்தை யெடுத்துக் காட்டத்தக்கவையாயிருந்தன. மைசூர் சிவில் சர்விஸ் பரிட்சையை ஜாரிக்குக்கொண்டு வரும் விஷயத்தில் மந்திர சங்கத்தில் நடந்த வாதத்தில், இவர் சென்னபட்டணத்தாராயினும், மைசூரார் பட்சத்தையே தாங்கிப்பேசினர். இவருடைய இல்லறவாழ்க்கையில், இவரைப்போன்ற பெரிய பதவியை வகித்த உத்தியோகஸ்தர்களிடத்தில் விளங்கிய அக்கிரமங்களினின்று நீங்கியிருந்தனர். இவர் கிறிஸ்துவரென்கிலும் உயர்ந்த ஜாதி ஹிந்துவைப்போல் ஆசாரசீலராய் ஒழுகினர். இவர் அநேக தருமங்கள் செய்தவர். அவைகள் பிறரறியவும் மதிக்கவும்படும் விதத்தில் வெளிகாட்டாமல் இரகசியமாகவே செய்துவந்தார். இவர் எல்லோரையும் அவரவர்கள் தராதரமறிந்து தக்கமரியாதையோடு நடத்திவந்தனர். கோபத்தைக் காட்டத்தக்க சந்தர்ப்பங்களிலும் கடினமான வார்த்தைகள் அவர் நாவினின்று வெளிப்பட யாம் பார்த்ததில்லை. இவரின் உயர்ந்து வளர்ந்த கெம்பீர தேகத்தின் முகச்சாயலும் அவையவங்களின் லட்ச

ணங்களும், இவரில் ஜனித்த அமைதியையும் நிதானமாய் பகுத்தறியுங் குணத்தையும் எடுத்துக்காட்டத்தக்க அடையாளங்களாக விருந்தன. இம்மகானின் பிரிவால் களங்கமற்ற இருதயம் படைத்த மேலான ஒருகனவானை மைசூர் இழந்து விட்டது. இப்பேர்ப்பட்ட இன்னொருவர் இச்சமஸ்தானத்துக்கினி கிடைப்பதரிது."

---

## புதுவை மகா வித்வான் ம-ா-ா-ஸ்ரீ சே. சவராயலு நாயகர் கூறின

## சரமகவிகள்.

### விருத்தம்.

தம்புசெட்டி யாரென்னும் சற்குணரே புண்ணியரே தயாளரே இவ்
அம்புவியோர் அகமகிழ அநேகநலஞ் செய்தவரே அண்டியும்மை
நம்பும் அன்பருக்கும் உறவினர்க்குமெற்கும் பரிசுதந்த நல்லோரே இவ்
வம்புசெறி மலர்ச்சோலை சூழ் பெங்களூரைவிட்டு மறைந்தீர் ஐயோ. (1)

உம்மைப்போல் சரிநீதி யோடதிகா ரஞ்செய்தே உயர்பேர் பெற்றோர்
தம்மை யாங் கண்டதில்லை தயாளமுள்ள உத்தமரே தவித்து வாடும்
எம்மை யாதரிப்பவர்கள் இங்கெவரும் இல்லையே எமக்கை விட்டு
செம்மையுறு பரமபதஞ் சேர்த்துவிட்டீர் யாங்கள்மிகத் தியங்கின்றோமே.

அரியர்உல கத்தில்நல்லோர் அவரிலும் நன்னீதியெல்லாம் ஆய்ந்து தேர்ந்தோர்
அரியர்எளி யவர்களைநன் காதரித்துக் காக்கின்றோர் அமைதியுள்ளோர்
அரியர்அர சர்கள் துதிக்க அநேகபெரும் பட்டங்கள் அடையப் பெற்றோர்
அரியர்எலாம் அமைந்ததம்பு செட்டியா ரேஉமக்கொப் பானோர் யாரே. (3)

பன்னருஞ்சற் குணமுடைய இராஜம்மா ளாம்உமது பாரியாளும்
துன்னுதுரை ராயல்தர்ம ராஜ்சத்ய ராஜ்சின்ன துரையாந் தம்பும்
மின்னும்அம ராவதியம் மாள்சத்ய வதியம்மாள் மிளிர்தனம்மாள்
என்னுமிவர்க் கிளையபக வதியம்மாள் செல்வர்பெண்கள் இங்குவாட. (4)

இனமாம்உம் மருகர்மரு கிகள்பேரர் பேத்திமார் எங்க நல்ல
தனசாமி செட்டியார் என்னும்உம்சோ தரர்மற்றோர் தயங்க எற்கு
கனமான வெகுமதிகள் சிறந்தமைசூர் கர்த்தர்தந்து களிக்கச் செய்த
மனமார்ந்த தம்புசெட்டி யாரேயான் மேன்மேலும் வாடிநிற்க. (5)

மண்ணுலக சுகசெல்வ வாழ்வையெல்லாம் பெற்றின்று மாறா நித்ய
விண்ணுலக பாக்கியத்தை விரும்பிச்சென்றீர் இங்கு மெலிந்தயானும்
நண்ணும்உம தருகில்வந்து பன்னாளும் உம்மையே நன்கு வாழ்த்த
எண்ணுகின்றேன் தம்புசெட்டி யாரேயான் வேறொன்றும் எண்ணிலேனே.

---

## பெங்களூர் சேன்ட் ஜேசேப் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் . ம-ா-ா-ஸ்ரீ, அ. வேங்கட சுப்புப்பிள்ளை யவர்கள் கூறிய இரங்கற் பாக்கள்.



### அறுசீரடி ஆசிரிய விருத்தம்.

மண்ணுலக வாழ்வைமதித் தனுபவித்துப் பின்வெறுப்புண் மருவியேயோ
விண்ணுலக மதித்துணர நினைந்தேயோ மெய்ஞ்ஞான மிகுத்த சீரால்
எண்ணுலகப் பெரியோர்கள் பணிந்தேத்துஞ் சேசுபா னிடை விடாம
னண்ணுலகம் புகற்கேயோ வெதுகருதித் தம்பு மன்ன நடந்த யிந்நாள். (1)

குடம்பையது தனித்தொழியப் புட்பறந்து சென்றதுபோற் குலவிவாழ்ந்த
வுடம்பைவிடுத் துறவினரை நண்பர்தமை விடுத்துயிருக் குறுதியான
விடம்பெரிய சேசுகுரு நாதனிரு மலரடிக ளெனப் பிடித்தே
விடும்பரிசிலாதகன்றாய் தம்புமன்ன மீள்வதுண்டோ விளம்புவாயே. (2)

தந்தைமகற் காற்றுநன்றி யவைமுதன்மை யுறக்கல்வி தருதலாகும்
மைந்தனவற் காற்றுநன்றி யவன்றவச்சீ ருலகுசொல வைத்தலாகும்
இந்தவகை யிரண்டாலுஞ் சிறிதேனுங் குறைவின்றி யிலகியார்க்கும்
முந்தியிருந் தனைதம்பு மன்னநின் றிறனென்னுன் மொழிதற் பாற்றே. (3)

கற்பவையீங் கிவையெனவே கசடற நீ கற்றுணர்ந்தாய் கற்ற வாறே
நிற்பதுதான் பயனெனமற் றவர்க்கெடுத்துக் காட்டாக நின்றாய் சொற்றேர்
விற்பனருண் மெச்சவரும் வென்றிதரு சொல்லாற்றன் மிகப்படைத்தாய்
நிற்பெறநின் னுரைகேட்கத் தம்புமன்ன விம்பருக்கு நேருங் கொல்லோ. (4)

நண்பரையே படைத்ததல்லாற் பகைவரைநீ படைத்தறியாய் நள்ளாரேனும்
பண்புறுநின் சமூகமுறிற் பகைமையறக் கேண்மைபுரி பான்மையோராய்
ஒண்பருவ மருவிகிற்பா னியற்றவல்ல முதுக்குறைவா லோங்கினின்றாய்
கண்புரையுந் தம்புப்பேர்க் குணமலையே யென்றுனையாங் காண்கிற்போமே. (5)

ஆங்கிலமுஞ் செந்தமிழு மாந்திரமுங் கன்னடமு மான்றோர் மெச்சப்
பாங்கினொடு கற்றுணர்ந்தாயுணர்ந்தவற்றாற் பயனுறவும் பழகினின்றாய்
ஓங்கியபல் சட்டமுணர்ந் துயர்நீதி யதிபதியா வுயர்த்தப் பெற்றாய்
தீங்கிழையாச் சுகுணனெனுந் தம்பு மன்ன வென்றுனையாந் தரிசிப்போமே()

அகத்திருந்த கருணைநிரம் பியதாக விளங்கியநின் னருளின் பார்வை
முகத்திருந்த விழிக்கமல மலர்காட்ட வின்சொல்வாய் முளரிகாட்ட
சகத்திருந்த வாதுலர்க்குக் கைக்கமலங் கொடைகாட்டத் தருமப்பைங்கூழ்
மிகத்திருந்து நெறிவளர்த்த தம்புமன்ன நின்பிரிவால் வெம்புற்றேமே. (7)

காவலருக் கிருகண்போற் சிறந்தன்றோர் குறிப்புணர்ந்து கருமமாற்றி
மாவலநல் மந்திரியாய்த் தந்திரியாய் விளங்கியவர் வாழ்த்தப் பெற்றாய்
ஏவலுமன் பொருளிடமுந் தழைத்தோங்கத் தனதனையொத் திருந்தாயந்தோ
பாவலரிங் குனைத்தேடத் தம்புநண்பா வெங்ககன்றாய் பகருவாயே. (8)

இல்லையென வந்தடுத்தார் குறையகலப் பெருமகிழ்ச்சி யிதயம்பூப்ப
நல்லவருள் பாராட்டி வழங்கினைநீயிம்மட்டோ நவிலுஞானம்
வல்லகதோ லிகமார்க்கக் கோயிலுக்குப் பெரும்பொருளை வாரியீந்தாய்
சொல்லரிய புகழ்த்தம்பு வேளைநின் பிரிவெண்ணித் துயரார்யாரே. (9)

யானேநின் னுடலாக நீயேயென் னுயிராக வென்னுள் வாழ்ந்த
கோனேயெங் குற்றனையோ வெனைப்பிரிந்து செல்லமனங் கொண்டதென்னே
மானேதன் னினம்பிரிந்தாற் போலானே னென்றுனது மனையாள்வாட
வானேறி யிருந்தனையோ தம்புமன்னு வுண்மையது வழுத்துவாயோ. (10)

எனைப்பயந்தாய் கல்வியது கற்பித்தாய் பொருள்செயவிங் கெனக்குத்தியோகத்
தினைப்பயந்தாய் மணம்புரிவித் தாயெனது விருத்திதனை தினமுநோக்கி
மினைப்பயந்த மேகம்போ லருள்புரிந்தா யுன்பிரிவை மிகநா ளுற்றேன்
எனப்பரிந் திராயலுநின் மகன்புலம்பத் தம்புமன்னு வெங்குற்றமோ (11)

தருமராஜப் பெயரோன் சத்தியராஜப் பெயரோ னின்பேர் தாங்கும்
பெருமைசா லிளங்குமரன் பரிவினொடு நின்பிரிவைப் பெரிது முன்னி
இருமையினு மீடேற வெமைப்புரந்த விறைவாவெங் குற்றமென்றே
யருமைமிகப் பாராட்டி யகம்வாடப் பிரிந்த தென்னோ வருண்மிக்கோனே.(12)

தனசாமி யெனும்பெயரைத் தந்தையெனக் கிட்டனர்யான் சனித்தவந்நாள்
கனசாமி நீயெனக்கப் பெயர்நிசமா கிடவைத்த கருணை காட்டு
மனசாலென் னண்ணு வென் றுனைக்காண்பே னென்று நம்பி வருந்தல் காணாய்
அனசாமி சேசுபத மடைந்த தென்னே தம்புநம்பி யறைகுவாயே. (13)

நின்னருமைப் புத்திரிக ளவருள்ளும் பகவதிநின் னினைந்து தேம்பிப்
பொன்னருமை பெருமைபடைத் ததுபோலச் சிறந்தவப்பா புண்யவானே
மன்னருமை சூராண்ட ஸ்ரீசாம ராஜேந்த்ரன் மற்று மன்னோன்
பன்னருமந்திரிமுதலோர்க் கிருகண்ணே யெனவிரங்கல் பாராய் தம்பு. (14)

மன்னவன் ஸ்ரீ கிருட்டினரா ஜேந்திரனு மற்றவன்றன் மந்த்ரிமாரும்
நின்னருமைநுண்மதியா லோசனைக ளவைநினைந்து நினைந்து தம்முள்
துன்னரிய துயர்படைக்க விகநீத்துப் பரஞ்சார்ந்தாய் பகருங்காலை
யுன்னியுனைச் சேசுபெரு மானுநனி யருளவைய முளதோ தம்பு. (15)

பெரிய நின்றன் குடும்பத்து மருகர்களு மருகிகளும் பிறகேளிரும்
துரியபர லோகமுற்ற நின்கொடையு நன்னடையுஞ் சொல்லியந்தோ
வரியகுண மேருவையா மினிக்கா ணு நாளெதுவென் றரற்றநீத்தாய்
உரியபரம் பொருளுறவாற் றம்புநம்பீ யிவ்வுறவை யுன்னுவாயோ. (16)

அன்றொருநா ளென்னுடனோர் நண்பகலில் வசனித்தே யமர்ந்த காலை
நன்றெனது குளநடுவி லுளநடுவில் வீற்றிருக்கு ஞானரூபம் [நீயே
ஒன்றுபரஞ் சோதியினைக் கண்டுகொண்டேன் குறைவிலனென் றுரைத்தாய்
இன்றுமதை மறக்கிலேன் தம்புவுனை ஞானியென வெண்ணினேனே. (17)

எத்தனைபேர் நிதிபடைத்தோ ரிருந்தாலு நின்போல்வா ரிகமேல்யாரே
முத்தனையாய் நினையொப்பார் தமிழருமை கண்டறிந்த முது ஞானத்தோய்

வித்தமிகப் பாவலர்க்குத் தந்துமகிழ்ந் தவர்கேண்மை விழைந்திட்டோனே
பத்தருனைச் சூழ்ந்துவரத் தம்புமன்ன விண்புகுந்த பரிசியாதே. (18)

ஆசனங்கள் பலவுளநின் மாளிகைவந் துனைக்காணு மன்பரான
மாசனங்க ளவற்றமரத் தாரகைநாப் பண்மதிபோல் வயங்கிநின்ருய்
பேசனங்க வேளன்ன யவையனைத்தும் விடுத்தனையாய்ப் பிரமாண்டத்தே
யீசனங்க ணமருலகா சனமடைந்தாய் தம்புமன்ன விதற்கீ டுண்டோ. (19)

நின்னருஞ்சோ தரனவன்றன் மகண்மருகர் நின்குடும்ப நின்மாணில்லாள்
பின்னருநின் பேராசி தனைநினைந்து வாழ்ந்துலகிற் பிறங்கா நிற்க
வன்னவருக் காசிவழங் கினைநினது குருவாசி யது நீ பெற்றே
துன்னுபர மண்டலவாழ் வடைந்தனையே தம்புமன்ன சுகவானீயே. (20)

---

## இராயபுரம் வித்வான் A. S. ஜெகராவு முதலியார் கூறிய

## சரமகவி.



### ஆறுசீராசிரிய விருத்தம்.

வான்வழங்கு நலமுழுது மன்பதைக ளினிதருந்த வழிசெய் நாதன்
ஊன்வழங்கு முருக்கொண்ட பத்தொன்பா னூற்றேழி னுயர்சூன்மாதந்
தான்வழங்கு பத்தொன்பான் றேதிபுதவாரத்துத் தானடைந்தான்
தேன்வழங்கு திருமொழியான் தம்புசெட்டி யெனும்பெயரான் றெய்வநாடே.()

இத்தகையான் யாவனெனி வியம்புதுமோ திமப்பெடைக ளினவண்டார்ப்ப
முத்தனைய சினைகாக்கு முண்டரிகத் தடவாவி முயங்குஞ்சோலைக்
கொத்தமருந் திரிசிராப் பள்ளிநகர்க் கௌரிகுலக் கொழுகொம்பானேன்
உத்தமன்சீர் தேசாயி ராயலு செட்டித்தவமே யுருவாய் வந்தோன். (2)

அன்னையெனுங் கித்தேரி யம்மாளுக் காருவ தாயமைந்தன்
கன்னனிகர் கொடையாளன் தனசாமிக் குடன்பிறந்த காவலாளன்
தன்னிகரில் ராயலுவேள் தருமராஜப்பிரபு சத்யராஜ-
மின்னுதம்பு செட்டியிவர் நால்வரையும் புத்திரரா விழைந்தமேலோன். (3)

புத்திரப்பே றினுமதிக மில்லையெனும் வள்ளுவர்சொல் பொய்யா வண்ணம்
இத்தலத்தி லுயர்பொன்னு செட்டி யெனும் மெய்ப்புகழோ னினிதுநோற்ற
மெய்த்தவமே பெண்ணுருவாய் மண்ணுலகில் வந்ததென வியந்து போற்ற
மொய்த்தமலர்க் குழலழகி சின்னம்மாட் கொருமகளா முளைத்துத் தோன்றி. (4)

கற்பினுக்கோ ரிலக்கான ராஜம்மை தெய்வமெனக் கருதுகொண்கன்
பொற்பினுக்கோ ரிலக்காக வரும்அமரா வதியம்மை பூங்கோல்போலுஞ்
சிற்றிடையாள் சத்யவதி செய்யதன வதிசுகுண செல்வ மெல்லாம்
முற்றுடைய பகவதியா மிந்நால்வர் செல்விகளா மொழிய வாழ்ந்தோன். (5)

ஈந்தியா பெருமாட்டி விக்டோரியாளம்மை யினிமை கூர்ந்து
ஈந்தவொரு சீ. ஐ. இ. பட்டமுடன் லார்ட் ரிப்ப னென்னும் பூபன்
ஆய்ந்துதரு பொன்மெடில்போ லளப்பிலாப் பலமெடில்க ளணியப்பெற்றோன்
சார்ந்தவரை யாதரிக்குந் தரணிக்கோர் கற்பகமாத் தழைத்துநின்றோன். (6)

சேவைதரு மெய்ஞ்ஞானச் சவேரியார் திருவுருவைச் சேவை செய்யக்
கோவைநகர் சென்றங்கே யத்தியட்ச குருமுகமன் கூறக்கேட்டோன்
பாவைபெறு மணிமாட டில்லிநகர் தர்பாரிற் பயன்மிக்குற்றோன்
தேவைபெறு முனிசூசை நற்றேம்பா வணிநூலைச் சிந்தை செய்வோன். (7)

பரிசுத்த பாப்புகுரு தன்னுருவப் பொற்பதக்கம் பரிசிலீய
வருசுத்த மகாராணி ரீஜெண்டு தருவரிசை மகிமைமேவப்
பெருசுத்த முறுராஜ தர்மப்ர வீணனெனும் பெயரே சாலத்
தருசுத்த குருமார்கள் பெரியோர்கள் நட்பெல்லாந்தழுவப் பெற்றோன். (8)

செப்பரிய எட்வர்ட்டு ஆல்பர்ட்டு விக்டரெனுஞ் செம்மலோரை
ஒப்பில்லா லார்ட்கர்ஜன் முதலாய துரைமாரை யுவப்பக்கண்டோன்
அப்பின்றி வடநாட்டிற் பர்க்கியினில் நேர்பஞ்ச மனைத்துந் தீர்ந்தோன்
மூப்பொழுதுஞ் சேசுமரி சூசையடி மறவாத முழுநெஞ்சுள்ளோன். (9)

மைசூரி னரசுரிமை மந்திரியாப் புவிமுழுதும் மகிழச்செய்தோன்
மைசூரின் முதல்நீதித் தலமுதன்மை நீதிபுரி மாண்பு பூண்டோன்
மைசூரின் மந்திரசங் கத்துமுத லங்கியென மதிக்கப் பெற்றோன்
மைசூரின் வேந்தரிரு கண்மணிபோல் நீங்காத வாழ்க்கை கொண்டோன். (10)

கிடைக்கரிய மீன்முடியுங் கதிருடையு மதியடியுங் கிழமை தோன்றக்
கடைக்கணருள் சுரந்தன்பு மீதூர வடியவரைக் காக்குஞ்சென்னை
அடைக்கல நாயகியன்னை திருவடிக்கே யன்புசெய்த வருமையாலே
அடைக்கலநா யகியடியே யடைக்கலமாக் கொண்டெழுந்தானறைவ தென்னே.

---

திருநெல்வேலி ஜில்லாவைச்சேர்ந்த மணவைமாநகரம் ம-ா-ா-ஸ்ரீ
மனுவேல் பிரான்சீஸ் உருதிரீக் அவர்கள் கூறிய

## ச ர ம க வி.



### பதினைந்து சீரடி இரட்டை ஆசிரிய விருத்தம்.

சீரணியுலகைப் புரந்திட மனுவாத்
    தேவர் கோனுதித்த வாயிரத்திற்
சேர் தொளாயிரத் தேழ் வற்சரந்திங்கள்
    தெள்ளிய வானிபத் தொன்பான்
திகதியாம் புந்தி வாரகள் ளிரவிற்
    செல்பத நாற்பத்து நான்கில்
ஜெகமெலாம் விளங்கு சிறப்பினன் மாண்பன்
    திரிசிர புரத்தின்மா வள்ளல்.

நேரணி கௌரி குலவதிபதியாய்
நின்றராயலு தவத் துதித்தோன்
நிகழ்த்தருந் தயையா ருத்தரீயத்தாய்
நிமல பொன்னடிமுடி சூடி
நியமமாய் வாழ்ந்தோன் அடைக்கலத்தாய்க் கோர்
நிகரிலாத் தமனியப் பீடம்
நெறியொடு அமைத்தோன் மயிலை மேற்ராணி
நேசயனுயுற்ற மா செல்வன்.

ஏரணி சென்னை ராஜதானியுமற்
றெங்கணுமுள கிறிஸ்துவர்க் கோர்
இன்புறு திலகம் போன்றவன் மைசூர்
இராஜ்ஜியத் தெழில்பெறு மந்த்ரி
இந்தியராஜாங் கத்தினற் சபைக்கே
இயைந்தவோர் தோழன் சீ. ஐ. இ.
என்னுமாபட்ட வர்த்தனப் பிரபு
இணையிலாக் குணநல முடையான்.

பேரணிகற்பு செறி மனையாளும்
பெட்புறு புத்ர பௌத்திரரும்
பெருமிதச் செல்வ பாக்யமும் பந்து
பேதமிற் காவலேவ லரும்
பெற்றுமற் றெவரு மதிக்கவே சிறந்தும்
பெரிதல விவையென நீத்துப்
பீடுறு தம்பு பூபன் வான் செல்வப்
பேருல கடைந்தனன் மாதோ.

---

இச்சரித்திர நாயகரின் இளைய சகோதரரும் இச்சரித்திரத்தை எழுதியவருமாகிய ம-ா-ா-ஸ்ரீ, தி. இரா. தனசாமி செட்டியார் இயற்றிய

## இ ர ங் க ற் பா மா லை.



### அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

திருமருவுங் கௌரிகுல திலகராய்ச் சிராப்பள்ளியில் ஜெனித்துச் சென்னை
மருவியங்கு வாழ்ந்த இராயலுசெட்டி யாரெனுநம் வண்பேர்த் தாதை
அரியகுண வதியாங் கித்தேரியம்மாள் தனைமணஞ்செய் தகில மீதிற்
பிரியமுற வுனையெனையு நான்குசகோ தரிகளையும் பெற்று ரன்றே. (1)

பெற்றெடுத்த மக்கடமிற் கொண்டம்மாள் சின்னம்மாள் பெரியம் மாயிக்
குற்றமண வாளர்களைத் தெரிந்துதந்தை மணஞ்செய்தா ருளங்களித்தே
மற்றுனையு மென்னுடனே சின்னம்மாய் தன்னையுமிம் மண்மேல் விட்டு
நற்றவர்சேர் வான்பதிநம் மன்னைபிதா விருவருமே நாடிச் சென்ருர். (2

அதிபால பருவத்தே யிருந்தநமை நம்பிதிகொண் டாதரித்த
துதிசான்மைத் துனர்பொன்னு செட்டிசின்னம் மாளுஞ்செய் தூய்தவத்து
நிதிபோலுற் பவித்தஇரா ஜம்மாளே நீமணந்து நிலவித் தன்னோர்
பதிமேற்பாக் கியவானு வாழ்ந்துபத்துப் பிள்ளைகளைப் பயந்தா யந்தோ. (3)

இன்னவருள் நின்றவரோ ரெண்மருளே புத்திரரீ ரிருவ ரானூர்
முன்னவனை நம்தாதை இராயலுப்பேர் கொண்டழைக்க மொழிந்தாயன்னேன்
பின்னவர்க்குத் தருமராஜ சத்தியரா ஜெனவிளங்கும் பெயரைச் சூட்டி
உன்னுடையதம்புமவனும்பெயரையேகனிஷ்டன்கொண்டோங்கச்செய்தாய்.()

வல்லஅம ராபதிசத் தியவதிநற் றனவதியாய் வாய்ந்த நாமம்
சொல்லிமுன்மூ வரையழைத்தா யிம்மூன்று புத்ரிகள்பின் மூன்றினுட்கு
நல்லபக வதியென்னும் நாமமதைத் தந்தவட்கு நன்மை செய்தாய்
எல்லவர்க்கு மணம்புரிந்தா யிவர்பயந்த மக்களுக்கு மீந்தாய் நாமம். (5)

உன்னிலிருந் துற்பவித்த புத்திர பௌத்ராதிகளிவ் வுலகந் தன்னில்
மின்னுமபி ராங்கோத்ரம் போலணியா வெஞ்ஞான்று மிளிரும் விண்மீன்
என்னவிளங் குவதாலிக் குடும்பத்தின் பிதாப்பிதா வென்று உன்னை
பன்னும்பாக் கியமுனக்குப் பரமனளித் தாரிந்தப் பாரின் மீதே. (6)

இம்மட்டோநீயடைந்தபாக்கியமண்ணு ஈன்றவுன்றன்புத்திரர்தம்மியல்பைநோ
எம்மட்டோ உளங்களித்தா யிகத்திலிவ ராலுன்னை எய்துங் கீர்த்தி [க்கி
தம்மட்டோ டேகாது தங்குமண்மே லெனத்தீர்க்க தரிசனம் போல்
நம்மட்டோ டேகாது நம்பெயர்காண் என்று பல்கால் நயந்துரைத்தாய். (7)

உன்னொடுகை லாசாலை தனிற்கல்வி கற்றவரி லுயர்ந்து நின்றாய்
மன்னுமுபாத் யாயர்தங்கள் மனமகிழ நன்னடையில் வயங்கி நின்றாய்
தன்னிகரி லாமுதல்வ னாய்கின்ற தாற்பரிசு தரவும் பெற்றாய்
மின்னுமுன்கல் வித்திறமும் ஒழுக்கமுங்கண் டுனைமேலோர் மெச்சினாரே. (8)

உற்றபதி னாறுண்டில் கலாசாலை நீங்கியபின் உயிர்வாழ் தற்கே
மற்றவர்க ளுதவியின்றி பரீட்சையிற்றேர்ந் துத்யோகம் வாய்க்கப்பெற்றாய்
சற்றுமவ காசமின்றி உழைத்தெண்ணில் வேலைகளைத் தளரா ஊக்க
முற்றுமுறத் திறத்தோடு முடித்துனைஜ மானர்நட்பு முழுதும் பெற்றாய். (9)

இப்படியுன் னுழைப்பாலும் உயர்கல்வித் திறத்தாலும் ஊக்கத் தாலும்
தப்பில்லா தெதுவுஞ்செய் சதுராலும் மிக்குயரத் தக்கோனென்ன
ஒப்பியநற் றுரைமார்கள் படிப்படியா யுனை யுயர்த்தி உவந்து தம்கை
யொப்பமிட்டு நற்சாக்ஷிப் பத்திரங்க ளெழுதித்தந் துளங் களித்தார். (10)

நல்லதுரை மார்வழங்கும் நற்சாக்ஷிப் பத்திரங்கள் நவின்ற வண்ணம்
வல்லவனீ யெனக்கண்டு உனக்குமுன்சீப் அதிகார மதித்துத் தந்தார்
எல்லவர்க்கும் பேதமின்றிச் சாந்தி செயுமுன்றன் இயல்பைக் கண்டு
சொல்லரிய புகட்சிகளைக் கூறியுன்னை உலகோர்கள் துதித்திட்டாரே. (11)

நீதிபுரி நின்றிறமும் நெறியுங்கண் டதிசயித்த நிபுண னான
மேதகுமை சூர்ஜுடிஷல் கமிஷனர்கிண் டர்ஸ்லிதுரை விரும்பியுன்னைக்

காதலுட னழைத்துத்தம் கோர்ட்டுஹெட் சிரஸ்தாவாக் களிக்கவைத்தார்
வேதியர்கள் நிறைந்தவந்தத் துறையில்நீ யடைந்தவெற்றி விளம்பற் பாற்றே.()

பன்னரிய மனுமுறைமற் றுஞ்சட்ட முறைதேர்ந்த பாவ லோனென்
றுன்னியுனை நியாயாதி பதித்துறையில் படிப்படியா யுயர்த்திப் பின்னர்
மன்னியசீப் கமிஷனரா பீஸ் அசிஸ்டண்ட் செக்ரடெரியா வைத்தாரன்றே
இன்னபடி மைசூராட் சியிலுநீ மேன்மைபெற்று யிதுவேயன்றி. (13)

அரியமைசூ ராட்சியையாங் கிலவரசர் ஆண்டபின்பவ் வரசினுக்கே
உரியவரா நின்றஸ்ரீ சாமரா ஜேந்த்ரரதை ஒப்புக்கொண்டே
அரசியலை நடத்தியகா லத்துமஹா ராணிரீஜெண்ட் ஆண்ட போதும்
பெரியநீ தித்தலத்துத் தலைமைஜட்ஜா வீற்றிருந்து பேர்பெற் றுயே. (14)

இங்குநீ பெற்றபெய ருங்கீர்த்தி யும்என்று விசைக்கப்போமோ
துங்கமன்ன னுனக்களித்த இராஜதர்ம ப்ரவீணனெனுந் தூய பட்டம்
எங்கணுமே பரவிநின்கீர்த் தியையெவர்க்கு மெஞ்ஞான்று மெடுத்தியம்பத்
தங்கியவோர் சாசனமா யிருக்குமெனில் வேறென்ன சாட்சி வேண்டும். (15)

அன்றியுநீ இராஜமந்த்ரா லோசனைச்சங் கத்துமுத லங்கி யாக
நின்றுஇராஜ் ஜியபரிபா லனம்புரிந்து பலநலங்கள் நிலைக்கச் செய்தாய்
என்றரசன் பற்பலகால் பதில்மந்த்ரி வேலையுனக் கீந்த தல்லால்
நன்றிசெறி நன்முகமன் கூறியுனை நண்பனைப்போல் நடத்தினரே. (16)

உத்தியோ கத்தைவிட்டு நீங்கிஓய் வடையஎண்ணும் உன்னோக்கத்தை
எத்திசையும் புகழ்ராஜப் ப்ரதிநிதிலார்ட் கர்ஸனுமே இனிதறிந்து
பத்தியுடன் மைசூராட் சியில்மூப்பா னுன்காண்டு பரிந்து நீசெய்
உத்தமஊ ழியததுக்கா வுனைவியந்து மெச்சினன்கேட் டுளங் களித்தாய். (17)

இவ்வரசை நடத்தியவாங் லேயகமி ஷனரெசிடண்ட் டிருபதின்மர்க்
கெவ்விதவொத் தாசையுந்தந் தவர்மதிக்கப் பெற்றாய்நீ யீதல்லாமல்
செவ்வியவிந் தியராஜப் பிரதிநிதிக ளாறுவர்தமை தெரிசித்தேபின்
அவ்வவரோ டுரையாடி உன்திறத்தை யவரறியு மதிர்ஷ்டம் பெற்றாய். (18)

அதிமேன்மை யோடரச னூழியஞ்செய் தனேகருளத் தன்பு கொண்டாய்
பதியோருன் றனைவாழ்த்தப் பொதுநலங்கட் காயுழைக்கும் பான்மையுற்றாய்
துதிமேவுந் தருமவைத் தியசாலை யுன்பெயராற் றுலங்கச் செய்தாய்
நிதியீந்து பெண்கல்விச் சாலையுன்பத் தினிபெயரால் நிலவவைத்தாய். (19)

தெய்வபணி விடைக்காய்பூ ஜைக்காயுற் சவத்துக்காய் திரவியத்தைக்
கைசோரா மற்கொடுத்து மனமுவந்தாய் மடாதிபர்க்குங் கன்னியர்க்கும்
ஐயமெடுத் துண்பவர்க்கும் அனாதபிள்ளை கட்குமிக்க அதிதிகட்கும்
செய்யுதவி கொஞ்சமோ அவரெல்லா முனையிழந்து தியங்கலானார். (20)

நல்வழியிற் பொருளீட்டி நல்வழியிற் செலவழித்து நன்மைபெற்றாய்
சொல்லரிய பந்துமித் திரர்தமையா தரித்தவர்கள் சுபாசுபத்துக்
கில்லையென்று மற்பொருள்தந் துதவினாய் நாவலர்க்கு மீந்தா யார்க்கும்
நல்லதந்தை தாய்போன்று யினியவர்கள் யாரைப்போய் நாடுவார்கள். (21)

இந்த மைசூர் சமஸ்தானத் துள்ளசுதே சக்கத்தோ லிக்கர் தம்மில்
முந்தியதா நற்பிரதா பங்கொண்டு நன்னெறியில் முயன்ற தாலே
சிந்துதே சத்துப்போஸ் தலர்பெயரா லிவ்வூரிற் சிறக்கப் பெற்ற
அந்தமுறு மாலயத்துள் நின்மேனி தனையடக்கும் அதிர்ஷ்டம் பெற்றாய். (22)

சொன்னவிவ்வா லயத்துள்நீ தொழுத்தெரிந்த விடத்தருகே தோன்றவைத்த
என்னுடைய காணிக்கை யாகுமிரட் சகரிதய வெழிற்சொரூபம்
மின்னுமந்த விடமேநின் மேனிதங்குங் கல்லறையா மேவிற் றன்றோ
இன்னபாக் கியமெவர்க்குங் கிடைப்பதரி தரிதெனயா னியம்பு வேனே. (23)

---

### வேறு - தேவாரப்பண்.

இத்தகு சீரும்பேரும் இகத்தினி லடைந்துநல்ல
உத்தம வானாய் வாழ்ந்தா யுறுமாயுள் எழுபதாக
அத்தனு ரழைக்குங் காலம் அணுகிய தென் றறிந்தே
சித்தமாய்க் காத்திருந்தாய் செல்வக்கண் மணி யண்ணாவே. (24)

வந்தநோய் வாதைமுற்று மனஞ்சகித் தொறுத்தில் வாழ்வின்
பந்தம தகற்றிப்பாப பரிகாரம் சற்ப்ர சாதம்
அந்த அர்ச் சிஷ்ட நெய்யும் அவஸ்தை பூசுதலும் பெற்றுச்
சுந்தர சேசுபாதந் துணையெனக் கொண்டு நின்றாய். (25

ஆத்துமம் பிரியுநேர மடுத்ததென் றறிந்தே உன்றன்
ஆத்தும குருசர்வாங்தோம் அருகுற அழைத்திருத்தித்
தோத்திரம் ஸ்வாமிதாரும் துணைக்கரத் தாசியென்று
நேர்த்தியாய்க் கேட்டடைந்தந் நிமிஷமே உடலை நீத்தாய். (26)

பத்தொன்பா னூற்றேழாண்டெட் பரவுஜூன் திங்கள் தன்னில்
பத்தொன்பான் றேதியாகும் பகர்புத வார மாலை
பத்தொன்றோ டரைமணிக்குப் பரகதி சேர்ந்தா யந்தோ
பத்தொன்றோ டைந்துபேறும் படைத்தநற் பாக்கியவானே. (27)

பத்னிராஜம்மா ளோர்பால் பதறியே யழுது நிற்க
புத்ரர்புத் திரிகளோர்பால் புலம்பிநெஞ் சயர்ந்து நிற்க
நத்திய பந்து மித்ரர் நாட்டிலுள் ளோரு மேங்க
நித்திய வாழ்வை நல்கும் நிமலன்றாள் சேர்ந்தா யண்ணா. (28)

இப்படிப் பட்டவுன்னை இழந்துபின் னுயிர்வைத்திங்கு
எப்படி வாழ்வோம் அண்ணா எம்துயர் கண்டிலாயோ
இப்படி மீதிலெம்மை இதமுறக் காத்திருந்தாய்
அப்படியே எங்கட்கா யமலனோ டிரந்தாள்வாயே. (29)

### வேறு.

அண்ணாவென் னாருயிரே அரியதவச் செல்வமே அமைச்சரேறே
கண்ணேயென் கண்மணியே கௌரிகுலக் கதிரொளியே கற்றோராம் பல்
விண்ணேகொள்மீனினத்துமுழுமதியேயெனவருமுன் மெய்யைத்தன்பால்
மண்ணேதான்மறைத்திடினும்வையங்கொண்டாடுமுன்சீர்மறைத்தற்பாற்றோ

எங்களுயிருக் கியிராய் எங்கள்குல மணிவிளக்கா யென்றும் வற்ரு
துங்கநிதிச் சாகரமாய்த் தூயகல்விக் களஞ்சியமாய்த் துகளிலாத
அங்கமுள வடிவனு யரசர்சபா லங்க்ருதனு யறநெறிச்சீர்
தங்கியவோர்பாத்திரமாய் விளங்கிய வுன்றனையிழந்து தவிக்கின்ருேமே. (31)

சரிநீதி அரசுபுரிந் திட்ட அமைச் சென்றனை ஸ்ரீ சாமராஜன்
கரிசனமாயுன்னியுளங் களித்துனக்கே யளித்தபெருங் கௌரவப்பேர்
அரியதென உலகோர்கள் கண்டுமெதித் திடப் பெற்ரு யதுபோல் விண்ணோர்
தெரிந்துனைக்கொண் டாடுதற்கோ தேவுலகஞ் சென்ருயென் செல்வ அண்ணு.

அரியருல கிடைக்கற்ருேர் அவருளுங்கற் றறிந்தபடி யமைந்து நிற்போர்
அரியரவ ருளுமதிகா ரம்படைத்தே யறநெறிநின் றமைதி வாய்ந்தோர்
அரியரவ ருளுநற்பத் தினிபுத்ர பௌத்ரரைக்கண் டகமகிழ்ந்தோர்
அரியரெலா மமைந்தவென்றன் கண்மணி யண்ணுவுனை யொப்பாவார்யாரே.

---

### வெண்பா.

தந்தைதாய் நீயே சகோதரனு நீயேயென்
றிந்தவுலகி லிருந்தேனை-சிந்தைசெய
விட்டேகி னுய்க்காண மேலுலக வாழ்வதனின்
மட்டே யிலாமகி மையை. (34)

உன்னுல்யான் சீர்பெற்றே உன்கைப் பிடிமண்கொண்
டந்நாட்டுக் கேக அருகனென-உன்னியவா
ருகாமலே அண்ணு அவ்வுலகஞ் சேர்ந்தனைநீ
சேர்காக்க உள்ளமெப்போ தும். (35)

உன்னைப்போ லெங்கட்கோ ருற்றதுணை யாருலகில்
உன்னைக்கொண் டல்லோவிங் குற்ருேஞ்சீர்-உன்னைப்
பிரிந்துவிட்ட போதே பிரிந்ததெல்லாச் சீரும்
தெரிந்துகொண்டோம் நின்னருமை தேர்ந்து. (36)

தனசாமி யென்பெயரைத் தாதையெனக் கிட்டார்
தனசாமி யாகவெனைத் தான்செய்-தினமா
எனக்குநீ செய்திட்ட எண்ணிலுப காரம்
நினைக்குந் தரமோசொல் நீ. (37)

தீர்க்கநோய் கொண்டு தினமும் வருந்துமென்றன்
மார்க்க முனக்கு மறைவலவே-பார்க்குளெனக்
காதரவு தந்துன் னருகிற்சேர்க் கப்பரம
வேதனிட மென்றனக்கா வேண்டு. (38)

---

செட்டியார் இறந்தபின்னும் அவரது பத்தினியாரும் புத்திரர் முதலியோரும் முன்போலவே ஒருமித்து அன்னியோன்னிய பட்சத்துடன் ஏகசமுசார சகிதராய் வாழ்ந்திருக்கின்றனர். செட்டியா

ரில்லாக்குறையேயன்றி வேறுகுறை அவர்களுக்கிருக்கவில்லை. புத்திரர் நான்குபேர்களும் மைசூர் அரசாங்கத்தில் அஸிஸ்டண்ட் கம்மிஷனர் (Deputy Collector) உத்தியோகத்தை வகித்து நன்னடையில் வர்த்தித்துத் தங்களருமை பிதாவின் கீர்த்திகுன்றாது அமைதியோடு வாழ்ந்திருக்கின்றனர். தங்கள்தகப்பனு ரிருக்கும்போது எவ்வகையாய்த் தங்கள் தாயார் சொற்கமைந்து அந்தம்மாளுக்குக் கிஞ்சித்தேனும் மனவருத்தந் தராமல் தங்கள் குடும்ப எஜமானியாகப் பாவித்து நடந்தார்களோ, அப்படியே இப்போதும் அவர்களைமதித்து அவர்கள் மனோபீஷ்டப்படி எல்லாக்காரியங்களையும் நடத்திக்கொண்டு சுகமாய் வாழ்கின்றார்கள். இப்படியே கடைசிவரையுமிருந்து இப்புத்திரர்கள் இன்னுமேலான பதவிகள் பெற்றுச் சந்ததி விர்த்தித்து தந்தையின் சீரும்பேரும் பிரகாசிக்கச் சுகசம்பன்னராய் நீண்டகாலம் ஜீவித்திருக்க எல்லாம் வல்ல கடவுளையாம் பிரார்த்திப்பதுபோல இச்சரிதத்தை வாசிக்கும் ஸ்திரீ பூமான்கள் யாவரும் பிரார்த்திப்பார்களெனக் கோருகின்றோம்.

---

## ச ந் த வி ரு த் த ம்.

---

வாழ்க மைசூர் அரசர் மஹாராணி  
வாழ்க மந்த்ரி வளப்பதி மாந்தர்கள்  
வாழ்கத் தம்புவேள் மைந்தர் மரபினர்  
வாழ்க விக்கதை வாசிப்போர் வாழ்கவே.

---

தம்பு செட்டியார் சரித்திரம் முற்றிற்று.



HOE & CO., PRINTERS, MADRAS.